வடம்பட்டநின்றுணைக்கொங்கைக்குடங்கொட்டு மதுரவமுதுண்டுகடைவாய், வழியும்வெள்ளருவியென நிலவுபொழிதருபுரி மருப்பிற்பொருப்பிடித்துத், தடம்பட்டபொற்றாது சிந்தூரகும்பத்தலத்தணிவகுத்தப்பவப்பிச்சலராசியெழுந்தடக்கையின் முகந்துபின்றுனசோணிரப்பி, முடங்கட்டமதிபக்குடைப்படையெனக்கன முகடுகைதடவியுடுமீன், முத்தம்பதித்திட்டமுகபடாமெனவெழுமுகிற்படாநெற்றிசுற்றுன், கடம்பட்டசிறுகட்பெருங்கொலையமழ விளங்களிறீன்றபிடி வருகவே, கற்பகாடவியிற்கடம்பாடவிப் பொலிகயற்கண்ணிவருகவருகவே. ௪

தேனொழுகுஞ்சப்பொலன் சீறடிக்கூட்டுசெம்பஞ்சியின் குழம்பல், தெள்ளமுதிறைக்கும்பசுங்குழவி வெண்டிங்கள்செக்கர்மதியாக்கரைபொரும், வானொழுகுதுங்கக்கரங்கப்பெருங்கங்கைவாணதியாச்சிவபிரான், மகுடகோடீரத்தடிச்சுவடழுத்திவிடுமரகதக்கொம்புகளிர்கால், மீனொழுகுமாயிருவிசும்பிற் செலுங்கடவுள்வேழத்தின் மத்தகத்து, வீற்றிருக்குஞ்சேயிழைக்கும் பசுங்கமுகுவெண்கவரிவீசும்வாசக்கானொழுகுதடமலர்க்கடிபொழிற் கூடல்வளர்கவுரியன்மகள்வருகவே, கற்பகாடவியிற் கடம்பாடவிப்பொலி கயற்கண்ணிவருகவருகவே. ௫

வேறு.

மடக்குந்நுமக்குன்றிரண்டேந்தும் வண்டன்மகளிர்சிறுமுற்றில், வாரிக்குவித்தமணிக்குப்பைவாரு நடைப்பவழிபிழைத்து, கடக்குங்கதிர்பொற்பரிசிலாநகுவெண்பிறைநைத்தேர்வளிபத, நாண்மீன்பரப்புச்சிறுமிதப்பாநாப்பண்மிதப்பநாற்கோட்டுக், கடக்குஞ்சரத்தின்மதநதியுங்கங்காநதியுமெதிர்கொள்ளக், ககனவெளியுங்கற்பகப் பூங்காடுங்கடந்துகடல்சுருங்க, மடுக்குந்திரைத்தண்டுறைவையை வளநாட்டாசேவருகவே, மலயத்துவசன்பெற்றபெருவாழ்வே வருகவருகவே. ௬

சுண்ணந்திமிர்ந்துதேனருவி துளைந்தாட்டுநறுந்தும்பிபசுந்தோட்டுக்கதவந்திறப்பமலர்ந்தோகைகூடி புக்கோகைசெயுந், தண்ணந்தமலக்கோயில்பலசமைத்தமருந்தச்சன் முழு, காற்றுக்கமுகு நாற்றியிடுந்தடங்காவணைப்பந்தரிலவீக்கும், விண்ணம்பொதிந்தமேகபடாமிசைத்தூக்கியபன்மணிக்கொத்து, விரிந்தாலெனக்காளிமிர்ந்துதலை விரியுங்குலைநெற்கற்றைபல, வண்ணம்பொலியும்பண்ணையயன்மதுரைக்கரசேவருகவே, மலயத்துவசன்பெற்ற பெருவாழ்வேவருக வருகவே. ௭

தகரக்குழலின்மறையு நறைதரு நிம்புசையுந்திணைக்களிற்றின், றடக்கைநசிப்புழைமடுப்பத்தளநுஞ்சிறு நுண்மருங்குற்பெருஞ், சிகரக்கள பப்பொம்மன் முலைத்தெய்வமகளிர்புடையிரட்டுஞ், செங்கைங்கவரி முகந்தெற்றிபுஞ்சிறுகாற்கொசித்து குழுவாங்க, முகாக்களிவண்ட

டைகிடக்கு முள்ளரிக்கொடிக்குங் கலைக்கொடிக்கு- முருந்து முறுவல்வி ருந்திடுபுன்மூரனெடு வெண்ணில வெறிப்ப—மசரக்கருங்கட் செங்கனி வாய்மடமான்கன்றுவருகவே, மலயத்துவசன்பெற்றபெருவாழ்வேவருக வருகவே. (௮)

தொடுக்குங் கடவுட்பழம் பாடற்றொடையின் பயனே நறைபழுத்த, துறைத்தீந்தமிழினொழுகுநறுஞ் சுவையே யகந்தைக் கிழங்கை யகழ்ந், தெடுக்குந்தொழும்ப ருளக்கோயிற்கேற்றும் விளக்கே வளர்சிமைய விம யப்பொருப்பில்விளையாடு மிளமென்பிடியேயெறிதரங்சம்,—உடுக்கும்பு வனங்கடந்துநின்ற வொருவன்றிருவுள்ளத்திலழ, கொழுக வெழுதிப்பா ர்த்திருக்கு முயிரோவியமேமதுகரம்வாய்,—மடுக்குங் குழற் காடேந்து மிளவஞ்சிக்கொடியேவருகவே, மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வேவ ருகவருகவே. (௯)

பெருந்தேனிறைக்குநறைக்கூந்தற்பிடியே வருகமுழுஞானப்-பெருக் கேவருகபிறைமௌலிப்பெம்மான் முக்கட் சுடர்க்கிடுநல் - விருந்தேவரு கமும்முதற்கும் வித்தேவருகவித்தின்றி, விளைக்கும்பர மானந்தத்தின் விளைவேவருகபழமறையின்,— குருந்தேவருகவருள் பழுத்த கொம்பே வருகதிருக்கடைக்கண், கொழித்தகருணைப்பெருவெள்ளங்குடைவார்பி றவிப்பெரும்பிணிக்கோர்,— மருந்தேவருகபசுங்குதலை மழலைக்கிளியே வருகவே, மலயத்துவசன்பெற்ற பெருவாழ்வே வருகவருகவே, (௰)

வருகைப்பருவ முற்றிற்று.



# அம்புலிப்பருவம்.



கண்டுபடுகுதலைப்பசுங்கிளியிவட்கொருகலாபேத மென்னநின்னைச்,க லைமறைகண் முறையிடுவ கண்டோவலா கொண்கலாநிதி யெனத்தெரிந் தோ, — வண்டுபடுதெரியற்றிருத்தாதையார்மரபின்வழி முதலெனக்கு றித்தோ. வளர்சடைமுடிக் கொன்றைதனைணறுங் கண்ணியா வைத்ததுக ண்டைப்பிடித்தோ,—குண்டுபடு பாற்கடல் வருந்திச்சேடியொடு கூடப் பிறந்தோர்ந்தோ, கோமாட்டியிவளின்னே வம்மெனக் கொம்மெனக்கூ விட்டுப்பெற்றாயுனக்,—கண்டுபடுசீரி தன்றுகலாவிவளுட னம்புலியாட வாவே, ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட னம்புலியாட வாவே. (௧)

குலத்தோடு தெய்வக்குழாம்பிழிந் தூற்றிக்குடித்துச் சுவைத்துமிழ்ந்த கோதென்றுமழல்விடங்கொப்பளிக்கின்ற விருகோளினுச் சிட்டமென்றும்,—கலைத்தோடு மூடிக்களங்கம் பொதிந்திட்டக்ஷயரோகி யென்றுமொருநாள், கணைகொண்டுபார்க்கவுங்கடவ தன்றெனவிக் கடற்புவியெடுத்திகழவிட்,—புலத்தோடு முடுமீன்கணத்தோடு மோடுகின்போல்வாராக்கு மாபாதகம், போக்குமிததலமலது புகலில்லை காண் மிசைப்பொங்குபுனல்கற்பகக்கா,—டலைத்தோடுவைவயைத் துறைப்படி மடப்பிடியொடம்புலீயாடவாவே, ஆணிப்பொன் வில்லிபுணர்மாணிக்கவல்லியுடனம்புலீயாடவாவே. (௨)

கீற்றுமதியெனநிலவு தோற்றுபருவத்திலொளிகிளர் நுதற் செவ்வியவ்விக், கெண்டைத்தடங்கணொருவிட்டிறைஞ்சக் கிடந்தது முடைந்தமுதம்விண்,—டேற்றுபுதுவெண்கலையுடுத்துமுழுமதியெனவுதித்தவமையத்துமம்மை, யொண்முகத் தொழுகுதிரு வழகைக் கவர்ந்து கொண்டோடினது நிற்கமற்றை,— மாற்றவளொடுங்கேள்வர் மௌலியிலுறைந்ததுமறந்துனை யழைத்தபொழுதே, மற்றிவன் பெருங்கருணைசொற்றிடக்கடவதோ மண்முழுதும்விம்முபுயம்வைத்,— தாற்றுமுடி யரசேவுமரசிளங்கு மரியுட னம்புலீயாடவாவே, ஆணிப்பொன் வில்லியுணர் மாணிக்கவல்லியுடனம்புலீயாடவாவே. (௩)

விண்டலம்பொலியப் பொலிந்திடுதி யேலுனது வெம்பணிப்பகைவிழுங்கி, விக்கிடக்கக்கிடத் தொக்கிடர்ப்படுதிவெயில் விரியுஞ் சுடர்ப்பரிதியின்,—மண்டலம்புக்கனை யிருத்தியெனினுள்ளொளி மழுங்கிடவழுங்கிடுதிபொன், வளர்சடைக்காட்டெந்தை வைத்திடப் பெறுதியேன்மாசுணஞ்சுற்றவச்சம்,— கொண்டுகண்டுஞ் சாதிருப்பது மருப் பொங்கு கோதையிவள் சீறடிகளின், குடர்குழம்பிடவே குமைப்பதும் பெறுதியெங்கோமாட்டி பாலடைந்தால்,— அண்டபகிரண்டமு மகண்டமும் பெறுதியா லம்புலீயாடவாவே, ஆணிப்பொன் வில்லிபுணர்மாணிக்கவல்லியுடனம்புலீயாடவாவே. (௪)

எண்ணில்பல புவனப்பெருந்தட்டை யூடுருவியிவள்பெரும்புகழ்கொடுநிலா, எங்கணுநிறைந்திடுவ தங்கதனின்மெள்ளநீ யெள்ளளவுமொண்டுகொண்டு,— வெண்ணிலவுபொழிவது கிடைத்தனையீத்திவள் விழிக்கடைகொழித்தகருணை, வெள்ளந்திளைத்தாடு பெற்றியாற் றண்ணளிவிளைப்பதும்பெற்றனைகொலாம்,— மண்ணிலொண்பைங்கூழ் வளர்ப்பதுனிடத்தம்மை வைத்திடுஞ்சத்தியேகாண், மற்றொரு சுதந்தர நினக்கெனவிலைக்கலைமதிக்கடவுணீயுமுணர்வாய்,— அண்ணலங்களியானையரசர்கோமகளுட னம்புலீயாடவாவே, ஆணிப்பொன்வில்லிபுணர் மாணிக்கவல்லியுட னம்புலீயாடவாவே. (௫)

முன்பும்பராசு செய்பெரும்பாவ முங்கோபமுரிமாத் தொடர் சாபமும், மும்மைத் தமிழ்ச்செழியன் வெப்பொடு கொடுங்கூனு மோசித்த

வித்தலத்தின்.— றன்பெருந்தன்மையை யுணர்ந்திலைகொல் சிவராசதா
ணியாய்ச்சிவன்முத்தித், தலமுமாய்த்துவாதசாந் தத்தலமுமானதித்தல
மித்தலத்தடைதியேல்,— மன்பெருங்குரவற்பிழைத்த பாவமு மற்றை
மாமடிகளிடுசாபமும், வளரிளம்பருவத்து நரைதிரையு முதிர்கூனுமாற்
றிடப்பெறுதிகண்டாய்,— அன்பரென்புருகக்கசிந்திடு பசுந்தேனொடம்
புலீயாடவாவே, ஆணிப்பொன்வில்லி புணர்மாணிக்கவல்லியுடனம்புலீ
யாடவாவே. (௬)

கும்பஞ் சுமந்தமத வெள்ளநீர்கொட்டுங் கொடுங்களி றிடும்போர்வை
யான், குடிலகோடீரத்திருக் கொண்டங்கலர் கொயதளிர்க்கைவருடவு
ஞ்,—செம்பஞ்சுறுத்தவும்பதை பதைத்தாரழற்சிகை யெனக்கொப்புளி
க்குஞ், சிறடிகள்கன்றிச்சிவந்திடச் செய்வதுந்திருவுளத்தடையாதுபொ
ற்,—றம்பஞ்சுமந்தீன்றமானிடவிலங்கின் றனிப்புதல்வனுக்குவட்டத்,த
ண்குடைநிழற்றுவினை வம்மென வழைத்த னடழைத்திடு கழைக்கரும்
பொன்,—றமபஞ் சுடன்கொண்ட மகரக்கொடிக்கொடி யொடம்புலீயா
டவாவே, ஆணிப்பேரன் வில்லிபுணர்மாணிக்கவல்லியுட னம்புலீ யாட
வாவே, (௭)

துளிதூங்கு தெள்ளமுத வெள்ளருவி பொழியுநின்றொன்மரபுதழை
யவந்து, தோன்றிடுங்கௌரியர் குலக்கொழுந்தைக்கண்டு துணை விழியு
மனமுநின்று,— களிதூங்கவளவளாய் வாழாமலுண்ணமுது கலையொடு
மிழந்துவெறுமட், கலத்திடுபுதுக்கூழினுக்கிரவு பூண்டொரு களங்கம்
வைத்தாயிதுவலால்,—ஒளிதூங்கு தெளிவிசும்பினினின் றொடொத்த
வனொருத்தன் கரத்தின்வாரி, உண்டொதுக் கியமிச்சினள்ளிருளிலள்ளி
புண்டோடுகின்றாயென்செய்தாய்,—அளிதூங்கு ஞிமிறெழுந்தார்க்குங்
குழற்றிருவொ டம்புலீயாடவாவே, ஆணிப்பொன்வில்லிபுணர் மாணிக்
கவல்லியுட னம்புலீயாடவாவே. (௮)

மழைக்கொந்தளக்கோதை வம்மினென்றளவினீவந்திலை யெனக்கடுகே
னும், வாண்முகச் செவ்விக்குடைந்தொதுங் கினவனெதிர் வர வொல்கி
யோபணிகள்கோ,—ளிழைக்குங் கொல் பின்றொடர்ந்தென வஞ்சியோ
தாழ்த்திருந்தனன் பேர்லுமெனையா, மித்துணையுமொருவாறு தப்புவித்
தோம்வெகுளி னினியொரு பிழைப்பில்லைகாண, — டழைக்குந் துகிற்
கொடிமுகிற்கொடி திரைத்துமேற் றலம்வளர்நகிற்கொடிகளோத்,தாழ்கு
ழலுநீவிநுதல்வெயர் வுந்துடைத்தம்மைசமயமிது வென்றலுவலீட்,—
டழைக்குந்தடம்புரிசை மதுரைத்துறைப்பெண்ணுடனம் புலீயாடவாவே,
ஆணிப்பொன்வில்லிபுணர் மாணிக்கவல்லியுடனம்புலீயாடவாவே,

எடகத்தெழுதாதவேதச்சிரத்தர்சிருக்குமிவள் சிறடிகணின், னிதய
த்தடத்தும் பொலிந்தவர் திருவுளத் தெண்ணியன்றே கபடமா, —நா

டகத்தைந்தொழினடிக்குப் பிரான் றெய்வத்தியொடு முடித்தல்பெற்று
ய், நங்கையிவடிருவுள மகிழ்ச்சிபெறி லிதுபோலொர் நற்றவப் பேறில்
லைகாண்,—மாடகக்கடைதிரித்தின்னரம்பார்த்துகிர்வடிம்புதைவருமந்த
லார், மகரயாழ்மழலைக்குமரவங்கணுண்டுகில் வழங்கக்கொழுங்கோங்கு
தூய்.—காடகப்பொற்கிழி யவிழ்க்குமதுனைத்திருவொடம்புலியாடவா
வே, ஆணிப்பொன்வில்லிபுணர்மாணிக்கவல்லியுடனம்புலியாடவாவே,

அம்புலிப்பருவமுற்றிற்று.

---

# அம்மானைப்பருவம்.

---

கனைக்குங்கடாமிருகவுட்குட முடைந்தூற்றுகளிறுபெறுவயிறுதூர்
ப்பக், கவளந்திரட்டிக்கொடுப்பதெனவஞ்சூழ்ந்தொர் கலைமதிக் கலசவ
முதுக்,—கினைக்கும்பெருந்தேவர் புன்கண்டுடைத்திடவெடுத்தமுதகல
சம்வெவ்வே, றீந்திடுவதெனவுமுழு முத்திட்டிழைத்திட்ட வெறிபந்தர்
நினையென்னவும்,—விளைக்குந் தளிர்க்கைக்கொழுந்தாமரைத் துஞ்சிமீ
தெழுந்தார்த்தபிள்ளை, வெள்ளோதி மத்திரளிதெனவுங் கரும்பாறை மீ
மிசைச்செஞ்சாந்துவைத்,—தரைக்குந்திரைக்கை வெள்ளருவி வையை
த்துறைவி யம்மானை பாடியருளே, ஆகங்கலந் தொருவர் பாகம்பகிர்ந்த
பெண்ணம்மானை யாடியருளே. (க)

திங்கட்கொழுந்தைக் கொழுந்துபடர்சடைச் செருகுதிருமணவா
ளன்மேற், செழுமணப்பந்தரிலெடுத்தெறிமுதவெண்டிரளையிற்புரளு
மறுகாற்,—பைங்கட்சுரும்பென விசும்பிற் படர்ந்தெழும்பனிமதியின்ச
த்தாவிடும், பருவமடமானென வெனம்மனை னம்மனைப்படை விழிக்க
யல்பாய்ந்தெழ,—வெங்கட்கடுங்சொலைய வேழக்குழாமிதென மேகக்கு
ழாத்தைமுட்டி, விளையாடுமழகளிறு கடைவாய்குதட்டமுகை விண்ட
வம்பைந்துகோத்த,—அங்கட் கரும்பேந்து மபிடேகவல்லி திருவம்மா
னையாடியருளே, ஆகங்கலந்தொருவர் பாகம்பகிர்ந்த பெண்ணம்மானை
யாடியருளே. (உ)

கள்ளூறுகஞ்சக் கரத்துறு சேயொளி கலப்பச்சிவப் பூறியும், கரு
ணைப்பெருக்கூற வமுதூறுபார்வைக் கடைக்கட் கறுப்பூறியும்'—கள்
ளூறு மறுவூறகற்றுமுக மதியில் வெண்ணகை யூறுநிலவூறியும், நற்ற

ரள வம்மனையோர் சிற்குணத்தினைமூன்று நற்குணங்கது வல்காட்ட,—
உள்ளுறுகளிதுளும் பக்குரவரிரு வீருமுற்றிடு துவாதசாந்தத், சொரு
பெருவெளிக்கேவிழித்துறங்குந்தொண்டருமுவலன்பென்புருகநெக்,—
கள்ளுறவுள்ளேகசிந்நூறு பைங்கேற லம்மானையாடியருளே, ஆகங்கலந்
தொருவர் பாகம் பகிர்ந்தபெண்ணம்மானை யாடியருளே. (௩)

குலைபட்ட காந்தட்டளிர்க்கைபிர்செம்மணிகுயின் றவம மனைகித்தில
ங், கோத்தவம்மனைமுன்செலப்பின் செலுந்தன்மை கோகனகமனையாட்
டிபாற்,—கலைபட்ட வெண்சுடர்க் கடவுடோய்ந் தேகலதுகண்டுகொண்
டேபுழுங்குங், காய்கதிர்க்கடவுளும் பின்றொடர்வதேய்ப்பக்கறங்கருவி
தூங்கவோங்கு,—மலைபட்டவாரமும் வயிரமும்பிறவுமாமாமணித் திர
ளைவாரி, மறிதிரைக்கையா லெடுத்தெறிய நாற்கோட்டு மதகளிறுபிளிறி
யோடும், அலைபட்டவையைத் துறைச்சிறை யனம்பேடையம்மானை யா
டியருளே, ஆகங்கலந்தொருவர் பாகம்பகிர்ந்தபெண் ணம்மானை யாடிய
ருளே. (௪)

தமரானநின் றுணைச்சேடியரிலொருசிலர்தடக்கையினெடுத்தாடுகின்,
றரளவம்மனைபிடித்தெதிர்வீசி வீசியிடசாரிவலசாரிதிரியா, —நிமிராமு
னம்மனையொ ராயிரமெடுத்தெறியு நிரைநிரையதாய்க் ககனமேல், நிற்கி
ன்றதம்மைநீ பெற்றவகிலாண்டமு நிறைத்துவைத் ததுகடுப்ப, இமிரா
வரிச்சுரும் பார்த்தெழப்பொழிலுடெழுந்தபைந்தாதுலகெலாம், இருள்
செயச்செய்துநின் சேனுபராகமெனு மேக்கமளகாபுரிக்கும்,—அமராவ
திக்குஞ்செய் மதுராபுரித்தலைவி யம்மானையாடியருளே, ஆகங்கலந்தொ
ருவர்பாகம் பகிர்ந்தபெண்ணம்மானை யாடியருளே. (௫)

உயிராயிருக்கின்ற சேடியரின் மலர்மீ துதித்தவளெதிர்த்து நின்றே,
டொட்டியெட்டிப்பிடித் திட்டவம்மனைதேடி யோடியாடித்திரியநீ,—
பெயராதிருந்துவினையாவது கண்டெந்தைபிறைமுடி துளக்கமுடிமேற்,
பெருகுசுர கங்கைநுரை பொங்கலம் மானையபெண்கொடியுமாடன்மா
ன,—வெயராமனம் புழுங்கிடுமமரர் தச்சனும்வியப்பச்செடுந் தவளமா,
மேடையுந்தண்டரள மாடமுந் தெண்ணிலாவீசத்திசைக்களிறெலாம்,
அயிராவதத்தினை நிகர்க்குமதுரைத்தலைவியம்மானையாடியருளே, ஆகங்
கலந்தொருவர் பாகம்பகிர்ந்த பெணணம்மானை யாடியருளே. (௬)

வேறு,

முத்தமழுத்திய வம்மனைகைம்மலர் முளரிமணங்கமழ, மொய்குழல்
வண்டுநின் மைவிழிவண்டின் மயங்கிமயங்கியிடக்,—கொத்துமணித்தி

ரளிற்செயு மம்மனைகுயிலின் மிழற்றியநின், குழலினிசைக்குருகிப்பனிதூங்கு குழுந்துளிசிந்தியிட,—வித்துருமத்தி லிழைத்தவுநின்கைவிரற்பவளத்தளிரின், விளைதருமொள்ளொளி திருடப்போலதுமீள்வதுமாய்த்திரிய,—அத்தன்மனைக்கெழுதியவுயிரோவிய மாடுகவம்மனையே, அழகுதழைந்தகல்யாணசவுந்தரியாடுகவம்மனையே. (எ)

விளரிமிழற்றளிகுடிநிறுகுழற்கொடி வீசியவம்மனைபோய், விண்ணினிரைத்தெழுவதுககனந்திருமேனிய ரானவருக்,—இளநிலவுமிழ்பருமுத்தின்சோனை யெடுத்தவர் திருமார்புக், கிடுவகடுப்பவுமப்பரிசேபலமணியினியற்றியவிம்,—வளரொளிவிம்பியவம்மனைசெல்வதுவானவிலொத்திடவும், மனனெக்குருகப் பரமானந்த மடுத்ததிருத்தொண்டர்க்,—களிகனியத்திரு வருள்கனியுங்கனியாடுகவம்மனையே, அழகுதழைந்தகல்யாண சவுந்தரி யாடுகவம்மனையே. (அ)

கைம்மலரிற்பொலி சதிர்முத்தம்மனை நகைமுத்தொளிதோயக், கண்டவர் நிற்கப்பிறர்சிலங்கைக் கமலச்சுடர்ந்துவச்,—செம்மணியிற்செய்திழைத்தன வெனவுஞ்சிஞ்சிலர் கட்கடையின், செவ்வியையவ்வியபின்கருமணியிற் செயதனசொல்லெனவும்,—தம்மனமொப்பவுணாப்பனமற்றைச்சமயத் தமைவுபெறார், தத்தமினின்று பிதற்றுவபொருவத்தனிமுதல்யாமென்பார்க்,—கம்மனையாவர்தம்மனையானவளாடுக வம்மனையே, அழகு தழைந்தகல்யாணசவுந்தரி யாடுக வம்மனையே. (௯)

ஒள்ளொளிமரகதமும்முழு நீலமு மொண்டாளத்திரளும், ஒழுகொளிபொங்க விழைத்திடு மம்மனையொருமூன் றடைவிலெடாக்,—கள்ளவிழ்கோதைவிரும்புறவீசுவ கண்ணுதல்பாற்செலநின், கையில்வளர்த்த பசுங்கிளியும்வளர்காமர் கருங்குயிலும்,—பிள்ளைமெனோதிமமும்முறைமுறையாற்பெருகிய காதலைமேற், பேசவிடுப்பகடுப்பவணைத்தொரு பெடையோடரசவனம்,—அள்ளல்வயற்றுயின் மதுரைத்துறைமகளாடுகவம்மனையே, அழகுதழைந்தகல்யாண சவுந்தரியாடுகவம்மனையே. (௧௦)

அம்மானைப்பருவ முற்றிற்று.

---

## நீராடற்பருவம்.

(*-)

வளையாடு வண்கைப் பொலன்சங்கொடும்பொங்கு மறிதிரைச்சங்கோலிட, மதரரிக்கட்கயல்வரிக்கயலொடும்புரள மகரந்தமுண்டுவண்டின்—

கிளையாடுநின்றிருக்கேசபாசத்தினொடுநிகளர்சைவலக்கொத்தெழக்,கிடை-
யாத புதுவிருந்தெதிர்கொண்டு தத்தமிற்கேளிர்க டழீஇக்கொண்டெ-
னத்,—தளையாடு கறையடிச்சிறுகட்பெருங்கைத்தடக்களிறெடுத்து மற்
றத், தவணக்களிற்றினொடுமுட்டவிட்டெட்டுமதகந்தியும்பக்கடித்து,—
விளையாடும் வையைத்தடந்துறைகுடைந்து புதுவெள்ளநீராடியருளே,
விடைக்கொடியவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி வெள்ளநீராடி
யருளே. (க)

நிறைபொங்கிநிஞ்செய்கை வெள்வளைகவிப்ப நகைநிலவுவிரி பவளம்
வெளிற், நீலக்கருங்குவளைசெங்குவளை பூப்பவற னெறிகுழற்கற்றைசரி
யத்,—திரைபொங்கு தண்ணந்துறைக்குடைந் தாடுவசெழுந்தரங் கக்க
கைதண், சிறுதிவலையாப்பொங்குமாணந்தமாக்கடறிளைத்தாடு கின்றதே
ய்ப்பக், கரைபொங்குமதிதிரைக்கையாற்றடம்பணைக்கழனியிற்கன்னியர்
முலைக், களபக்குழம்பைக்கரைத்துவிட் டள்ளற்கருஞ்சேறு செஞ்சேற
தாய்,—வினைபொங்கிடத்துங்க வேகவதி பொங்குபுதுவெள்ள நீராடிய
ருளே, விடைக்கொடி யவர்க்கொடிகயற்கொடிகொடுத்தகொடி வெள்ள
நீராடியருளே. (உ)

பண்ணுறுகிளிமொழிப் பாவைநின் றிருமேனி பாசொளி விரிப்பவந்த
ண்-பவளக்கொடிக்காமர்பசிளங்கொடியதாய்ப்பருமுத்த மரகதமதாய்
த்-தண்ணுறமல்லற்றுறைச்சிறை யனங்களி தழைக்குங்கலாமஞ்ஞையா
ய்ச் - சகலமுந் நின்றிருச்செளரூபமென் றோலிடுஞ் சதுமறைப்பொருள்
வெளியிடக் கண்ணுறு குழலியர் குடக்கொங்கைபொங்குசெங் களபமு
ங்கத்தூரியும்- கர்ப்பூரமுமொக்கக் கரைத்தோடிவாணியுங் காளிந்தியுங்
கங்கையாம்-விண்ணுறு மளவளாய்விளையாடு வையைபுதுவெள்ளநீராடி
யருளே-விடைக்கொடி யவர்க்கொருகயற்கொடி கொடுத்தகொடி வெள்
ளநீராடியருளே. (௩)

நூங்குசிறை யறுகா லுறங்குகுழனின் றுணைத்தோழியர்கண் மேற்கு
ங்குமம்-தோயும்பனித்துறைச்சிவிறிவீ சக்குறுங்குளியெம்மருங்குமோ
டி-வாங்குமலைவில்லியார் விண்ணுருகநனைந்தவர்வணைந்திடுதிகம்பரஞ்செ
வ்-வண்ணமாச்செய்வதச்செவ்வானவண்ணரொடுமெஞ்சள்விளையாடலே
ய்ப்பக்-தேங்குமலையருவிநெடு நீத்தத்துமாசுணத் திரள்புறஞ்சுற்றியீர்
ப்பச்-சினமேழு மொன்றொரு சுழிச்சுழல்வமந்தரந்திரைக்கடன் மதித்த
ன்மானும் - வீங்குபுனல் வையைத்தடந்துறை குடைந்துபுது வெள்ள

நீராடியருளே - விடைக்கொடியவர்க்கொரு கயற்கொடிகொடுத்தகொடி வெள்ளநீராடியருளே. (௪)

துளிக்கும் பனித்திவலை சிதறக்குடைந்தாடு துறையிற் றுறைத்தமிழொடும்-தொன்மறை தெளிக்குங் கலைக்கொடி யெனுந்துணைத்தோழி மூழ்கிப் புனன்மடுத் - தொளிக்கும்பகத்துமற் றவளென வனப்பேடையோடிப்பிடிப்பதம்மை-யொண்பரிபுரத்தொனியு மடநடையும்வெளவின துணர்ந்துபின்றொடர்வதேய்ப்ப-தெளிக்குந்தரங்கந்தடங்கங்கையுடனெட்டி நித்திலப்பந்தாடவுந்திரைமணித்திரளின்கழங்காடவுந்தன்னெடுந்திரைக்கையெடுத்து,—விளிக்கும்பெருந்தண் டுறைக்கடவுள்வையை நெடுவெள்ளநீராடியருளே, விடைக்கொடியவர்க்கொருகயற்கொடிகொடுத்தகொடி வெள்ளநீராடியருளே. (௫)

வேறு.

துங்கமுலைப்பொற்குடங்கொண்டுதூநீர்நீந்திவிளையாடுங், துணைச்சேடியர்கண்மேற்பசும்பொற் சுண்ணமெறியவறச்சேந்த;—அங்கண்விசும்பினின்குழற்காட் டதுகாற்சுரும்பரெழுந்தார்ப்ப, தையன்றிருமேனியிலெம்மையருட்கட் கரும்பார்த்தெழன்மானச்,—செங்கணிளைஞர்களிக்காமத்தீமூண் டிடக்கண்டிளமகளிர், செழுமென்குழற்கூட்டகிற்புகையாற் புகையாற் றிரங்காய்க்கதலிபழுத்துறை,—பொங்கு மதுரைப்பெருமாட்டி புதுநீராடியருளுகவே, பொருநைத்துறைவன் பொற்பாவாய்புதுநீராடியருளுகவே. (௬)

இழியும்புனற்றண்டுறைமுன்றிலிறுகெம்பெருமான் மண்சுமந்த, இடனென்றலர்வெண் கமலப்பெண்ணிசைப்பக்கசிந்துள்ளுருகியிரு, விழியுஞ்சிவப்பவானந்த வெள்ளம்பொழிந்து நின்றனையால், மீண்டுபெருகவிந்தத ற்கோர்வேலையிடுதன் மிகையன்றே,—பிழியுநறைக்கற்பகமலர்க்கபிரச மலர்ப்பூந் துகண்மூழ்கும், பிறைக்கோட்ட யிராவதங்கூந்தற்பிடியோடாடத்தேனருவி,—பொழியும் பொழிற் கூடலிற்பொலிவாய்ப்புதுநீராடியருளுகவே, பொருநைத்துறைவன் பொற்பாவாய்புதுநீராடியருளுகவே. (௭)

மறிக்குந்திரைத்தண் புனல்வையையணையிட விரிமண்கூடை கட்டி, வரிச் சுமந்தோர்க் கம்மை துணைமணிப்பொற் குடத்திற்கலைத் தூற்று,— வெறிக்குங்குமச்சே றெக்கரிடும் விரைப்பூந் துறைமணமோ லொருத்தி, வெண்பிட்டிடவு மடித்தொருவன் வேலை கொளவும்

வேண்டுமெனக்,— குழிக்குமிடத்திற்றடந்து நீர்குடையப்பெறினக் கங்கைதிருக், கோமூரத்துக்குடியிருப்புங் கூடாபோலும் பொலன்குவட்டுப்,— பொறிக்குஞ்சுறவக்கொடியுயர்த்தாய்புதுநீராடியருளுகவேபொருனைத்துறைவன்பொற்பாவாய்புதுநீராடியருளுகவே, (அ)

வேறு,

சொற்கொடி யோடு மலர்க்கொடி கொய்து கொடுத்தவிரைத்தொடையும், சுந்தரிதீட்டிய சிந்தூரமும்மிரு துங்கக்கொங்கைகளின்,—விற்கொடிகோட்டிய குங்குமமுங்குடை வெள்ளங் கொள்ளைகொள, வெளியேகண்டுநின் வடிவழகையன் விழிக்கு விருந்துசெய,— இற்கொடியோடு கயிற்கொடி வீரனெடுத்தகருப்புவிலும், இந்திரதனுவும் வணங்கவணங்குமிணைப் புருவக்கொடிசேர்,— பொற்கொடியிமயமடக் கொடிவையைப்புதுநீராடுகவே, பொருனைத்துறையொடு குமரித்துறையவள்புதுநீராடுகவே (௯)

கொள்ளைவெள்ளரு விபடிந்திடுமிமயக் கூந்தன்மடப்பிடிபோல், கொற்கைத்துறையிற்சிறைவிரியப்புனல்குடையுமனப்பெடைபோல்,— தெய்வக்கங்கைத்திரை யூடெழுமொழு செம்பவளக்கொடிபோல்,— கள்ளவிழ்கோதையர் குழலிசை கற்றுப்பொற்றருவிற், களிகூறவுண்ட மடப்பெடையோடுகலந்துமுயங்கிவரிப்,— புள்ளுறைபூம்பொழின் மதுரைத்துரைமகள் புதுநீராடுகவே, பொருனைத்துறையொடுகுமரித் துறையவன் புதுநீராடுகவே (௧0)

நீராடற்பருவமுற்றிற்று.

---

## ஊசற்பருவம்

---

ஒள்ளொளியபவளக்கொழுங்கான்மிசைப்பொங்குமொழுகொளியவயிரவிட்டத் தூற்றுஞ்செழுந்தண்ணிலாக்கால்விழுந்தனைய வொண்டரளவடம்வீக்கிடும்,— அள்ளிடவழிந்து செற்றொளி துளும்புங்கிரண வருணரத்நபடலகையுக், காடுநின்றேற்றமப் பரிதிமண்டலம் வளரும் பெருஞ்சுடரை யேயப்பத்,— தெள்ளுசுவைய முதங்கனிந்த வானந்தத்திரைக்கடன் மடுத்துழக்குஞ், செல்வச்செருக்கர்கண் மனக்கமலநெக்கபூ

ஞ் சேக்கையிற் பழையபாடற்,— புள்ளொளியெழக்குடி புகுந்தசுந்தர வல்லிபொன்னூசலாடியருளே, புழுகுநெய்ச்சொக்கர்திருவழகினுக்கொத்தகொடி பொன்னூசலாடியருளே, (க)

விற்பொலியநிலவுபொழி வெண்ணித்திலம் பூண்டெவிழுதுபடமழகதிர்விடும், வெண்டரளவூசலின் மிசைப்பொலிவபுண்டரிக வீட்டிற்பொலிந்துமதுரச்,— சொற்பொலிபழம்பாடல் சொல்லுகின்ற வளுநின்சொருபமென் பதுமிளநிலாத், தூற்றுமதிமண்டலத் தமுதமாயம்மைநீ தோன்றுகின்றதும்விரிப்ப.— எற்பொலியவொழுகு மூழுமாணிக்கமணிமுகப் பேறிமறைமுகிறவழ்வதவ், வெறிசுடர்க்கடவுடிரு மடியிலவன் மடமகளிருந்துவிளை யாடலேய்க்கும்,— பொற்புரிசைமது ராபுரிப்பொலி திருப்பாவை பொன்னூசலாடியருளே, புழுகுநெய்ச் சொக்கர் திருவழகினுக்கொத்தகொடி பொன்னூசலாடியருளே. (உ)

உருகியபசும் பொன்னசும்பவெயில் வீசுபொன்னூசலே யுதைந்தாடலும், ஒண்டளிரடிச்சுவடுறப் பெறுமசோகுநம் வொழுகுமவர் பூத்ததிர்வதுன்,— திருமுணுறுவக்மகந் தெந்தையார்நிற்பது தெரிதிட நமக்கிதுவெனச் செஞ்சிலைக்கள்வனொருவன் றொடைமடக்காது தெரிகணைகள் சொரிவதேய்ப்ப,— எரிமணிகுயின்றபொற் செய்குன்று மழகதிரெறிப்பவெழு செஞ்சோதியூடிளமதி யிமைப்பதுன் றிருமுகச்செவ்விவேட்டெழுநாத்தலைத் தவமவன்,— புரிவதுகடுக்குமது ராபுரிமடக்கிள்ளை பொன்னூசலாடியருளே, புழுகுநெய்ச்சொக்கர் திருவழகினுக் கொத்த கொடி பொன்னூசலாடியருளே (ஙு)

கங்கைமுடிமகிழ்நர்திரு வுளமசைந்தாடக்கலந்தாடு பொன்னூசலக், கடவுடிருநோக்கத்து நெக்குருகியிடநின் கடைக்கணேக் கத்துமற்றச், செங்கண்விடையவர்மனமு மொக்கக்கரைந்துருகு செய்கையவர் சித்தமேபொற், றிருவூசலாவிருந்தாடுகின் றயெனுஞ்செய்தியை யெடுத்துரைப்ப,— அங்கணெடுநிலம் விடாபடக்கிழித்தோடிவே ரடியிற்பழுத்தபலவின், அளிபொற்சுளைக்குடக்கனியுடைந்தூற்றுதே னருவிபிலமேழுமுட்டிப்,— பொங்கிவழிபொழின்மதுர மதுரைநாயகி திருப்பொன்னூசலாடியருளே, புழுகுநெய்ச்சொக் கர்திருவழகினுக் கொத்தகொடி பொன்னூசலாடியருளே (ச)

சேர்க்குந் சுவைப்பாட லமுதொழுக வொழுகுபொற் றிருவூசல் பாடியாடச். சிவபிரான்றிருமுடி யசைப்பமுடிமேற் பொங்கு செங்கணரவரசநிலம்வைத்,— தார்க்கும்பணுடவியசைப் பச்சராசரமு மசைகின்றத

ம்மனையசைங், காடலாலண்டபகிரண்ட முமசைந்தாடுகின்ற தேய்ப்க்
கார்கொங் தளக்கோதை மடவியர்குழர்கூட்டு சுமழ்நறும்பு கைவிண்மி
சைக், கைபரந்தெழுலதுருமாறி ரவிமணடலங்கைக்கொல விருட் டல
ம்வான்,— போர்க்கின்றகொக்கு மதுராபுரிமடக்கிள்ளை பொனனூசலா
டியருளே, புழுகுநெய்ச்சொக்கர்திரு வழகினுக்கொத்த கொடிபொன
னூசலாடியருளே (ரு)

தேர்க்கோலமொடுநின் றிருக்கோலமுங்கண்டு சிந்தனைபுழுங்குகோ
பத், தீபவியமூண்டெழுங் காமானலங்கான்ற சிகையெனவெழுந்துபொ
ங்குங்,— கார்க்கோலமேவணியர்த முள்ளமெனவே பொற்றடஞ்சிலையுமு
ருகியோடத், தண்மதிமுடித்ததும் வெள்விடைக் கொணமணி தரித்த
தும்விருத்தமாகக்,— கார்க்கோலநீலக்கருங் களத்தொடொருவர் செங்க
ளத்தேற்றலமாகட்களை தாக்குங்கரும்புருவ வில்லொடொருகைவுற்கு
னித்துநின்ற,— போர்க்கோலமேதிரு மணக்கோலமான பெண்பொன்
னூசலாடியருளே, புழுகுநெய்ச்சொக்கர்திரு வழகினுக்கொத்த கொடி
பொன்னூசலாடியருளே. (சு)

குழியும்பசுங்கண் முசுக்கலைவெரீஇச்சிறுகுரும்பலவினெடிடபாரக்,
கொம்பொடிபடத்தூங்குமுட்புறக்கனியின்குடங்கொண்டுநீந்தன்மடை
வாய்,— வழியுங்கொழுந் தேனுவட்டெழுசடங்காவுன் வள்ளுகிர்க் கரு
விரற்கூன், மந்திக ளிருந்தேகும் விசையினில்வினசங்கெழு மாக்கோடு
பாயவயிறு,— கிழியுங்கலைத்திங்கள முதருவிதூங்குவகிளைத்து வண்டு
முழைபைந்துழாய்க், கேசவன்கால்விசவண்ட கோளகைமுகடு கீண்டுவெ
ள்ளருவிபொங்கிப், பொழியுந்திறத்தினை நிகர்க்குமதுரைத் தலைவிபொ
ன்னூசலாடி யருளே, புழுகு நெய்ச் சொக்கர் திருவழகினுக் கொத்த
கொடி பொன்னூசலாடியருளே. (எ)

ஒல்குங்கொடிச்சிறு மருங்கிற்கிரங்கி மெல்லோதிவண்டார்த்தெழப்
பொன், னூசலையுதைந்தாடு மளவின்மலர்மகளம்மை யுள்ளடிக்கூன பி
றைதழீஇ,— மல்குஞ்சுவட்டினை வலம்புரிக்கீற்றிதுகொல் வாணியென்
ரசதியாடி, மணிமுறுவல் கோட்டநின்வணங்கா முடிக்கொருவணங்கமெ
டு நாணவழங்கப்,— பில்குமகுறாய பனிக் கூதிர்க்குடைந் தெனப்பிரச
நாறைம்பாற்கிளம், பேடைநயர்களுட்டுங்கொழும்புகைமடுத்து மென்பெ
டை யொடுவரிச்சுரும்பர்,— புல்குங்கடமபணையுடுக்கமதுரைத்தலைவி
பொன்னூசலாடியருளே, புழுகு நெய்ச்சொக்கர் திருவழகினுக்கொத்த
கொடி பொன்னூசலாடியருளே, (அ)

கொண்செய்த செழுமணித்திருவூச லாமகளிர்கொண்டாட வாடுந் தொறுங், குறுமுறுவ னெடுநில வருந்துஞ் சகோரமாய்க் கூந்தலங் கற்றைசுற்றுங்,— தென்செய்தமழலைச் சுரும்பராய்மங்கைநின் செங்கைப்ப சுங்கிளிளையாய்த், தேவதேவன்பொலிவ செவ்வுருவுபாமலன் திருவுருவின் முறைதெரிப்ப,— மின்செய்தசாயலவர் மேற்றலத்தாடியவிரைப் புனலினருவிகுடையும், வெள்ளானை குங்குமச் செஞ்சேறுநாறமடமென்பிடியையஞ்சிசிரிக்கும்- பொன்செய்தமாட மலிகூடற்பெருஞ்செல்வி பொன்னூசலாடியருளே- புழுகுநெய்ச்சொக்கர் திருவழகினுக் கொத்தகொடிபொன்னூசலாடியருளே. (௯)

இருபதமு மென்சூரம் கிண்கிணியுமுறையிட் டிரைத்திமேரிச் சிலப்பு - இறுமிறுமருங்கென் றிரங்குமேகலையும்பொ னெழுதுசெம்பட்டுவீக்கும்- திருவிடையுமுடைஞாரமும் மொட்டியாணமுஞ் செங்கைப்பசுங்கிள்ளையுந் திருமுலைக்கரளவுத்தரியமும்மங்கலத் திருநாணுமழகொழுகநின்- றருள்பொழியுமதி முகமுமுகமதியினெடு நிலவரும்புகுறுநகையுஞான- ஆனந்தமாக்கடல் குடைந்துகுழைமகரத்தொடமராடுமோடரிக்கட- பொருகயலும்வடிவழகு பூத்தசுந்தரவல்லி பொன்னூசலாடியருளே-புழுகுநெய்ச்சொக்கர் திருவழகினுக்கொத்தகொடி பொன்னூசலாடியருளே, (௧0)

ஊசற்பருவ முற்றிற்று.

---

ஆ. பருவம பத்துக்குத் திருவிருத்தம் ௧0௨.

மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ்.

முற்றிற்று.

---

சம்மகதேசம் இவைக்ளெல்லாம் மனோரம்மியமாயி
ருக்கின்றன. இத்தேசங்களுக்குள் மிச்சமாய்ச் சிறந்த
து மச்சதேசம், அதேதெனனில் நீதியுநெறியு நிறைந்
து நிலவள நீர்வளமுயர்ந்து நிறையும்பொறையுமிகு
ந்துநிலையாய்மும்மாரிபொழிந்து. தருமமும்நற்கரும
முந் தழைத்து சகலநிதிகளுஞ்செறிந்து, பழுதற்றகு
டிகளும், படைகளும் புகழ்ந்து தொழுது வணங்கச்
செழிந்துமனுநீதிவழியேபரந்து, அஷ்ட திக்களவும்
ஆக்கியாச்சக்கரம்போக்கிசெங்கோல்செலுத்தி, வேத
வேள்விவேதியர்பலரும்வானவர்விற்பனர்மாதவர்சில
ரும் மாதுஸ்தானம் போல் பொருந்தி வாழ் வை
ப்பெரும்படியான விராட ராஜ னுடைய மச்ச நா
டு ஐயா; இத்தியாதி நன்மைகளுக் கிருப்பிடமான
பட்டணஞ்சேர்ந்து நம துருவை மறைத்து பயமி
ல்லாமல் காலங்கழிப்பதே ஜெயமாகும்நமக் கொரு
நாளுந் தீங்கில்லை நாதனேவேறொருநாட்டைவிரும்
புவோமாகில்நமதுகாரியகாரணங்கள் ஒருவேளைவெ
ளிப்பட்டாலும் வெளிப்படும், இதன்றியும் துரியோ
தனனுடையதூதர்களும் காரியஸ்தர்களும்மந்திரிசா
மந்தர்களும், தினந்தோறும்போக்குவரத்தாயிருப்பா
ர்கள் அப்பேர்ப்பட்ட நிர்ப்பந்தமான வருத்தம்நமக
கிந்தவிராட நகரத்திலிருக்கமாட்டாது. மேலும், இ
ந்தப்பட்டணத்து மச்சராஜன் நமக்குப்பூர்வசம்பந்த

பவார்த்தைக ளன்புடன்பேசி, அவர்கள் மனங் கனிந்
துரைத்தவார்த்தையையும் ஆசீர்வாதத்தையும் பெ
ற்றுக்கொண்டு முக்காலும்வலம்வந்து முடியுறவண
ங்கி எக்காலுமுங்கள் கிருபையெங்கள்மேல் இருக்க
ட்டுமென்று உபசரித்து, பிரியப்படாத பிரியத்துட
ன்விடைகொடுத் தனுப்பிவிட்டு, அன்றிரவுமுழுது
ம்நடந்துசூரியோதயத்திற்கு முன்னுதாய்செல்வச்சி
றப்போங்கியவிராடபுரஞ்சேர்வோமென்று, திரௌ
பதாதேவி, பாண்டவரைவருங்கலைக்கியானமுணர்ந்த
தௌமியாச்சாரியருந்தொலைக்காவழியடர்ந்தகொடி
படர்ந்த மலைக்காடுகடந்து, பருக்கைக் கற்களும் பா
லைவனமும்-வருக்கை-மா-தேக்கு-மலர்ச்சாலை- சோ
லையும். அருவிபெருகி ஆறும்-குருவி மருவிய கூடும்,
ஏரியெதுவாய்நாடும்-டள்ளர்வாழும்வீடும் - பரந்தம
ணல்மேடுங்கடந்து, பற்பலபாஷைமன்னரும் விற்ப
னவிவேகரும் வந்தொதுங் குகின்றசந்திர வட்டக்கு
டையினையுடையவிராடராஜனது மச்சநாடெல்லையி
ல்வந்தார்கள் அப்போதுபச்சைப்புரவிபூட்டிஓராழி
யச்சுக்தேரினையோட்டிவருகின்றசூரியனுங் கிழக்கு
த்திக்கில் எழுந்தான்.

அன்றிரவுமுழுது நடந்த பாண்டவரும் பாஞ்சா
லியும் புரோகிதரும் இனிமேல் தங்களெண்ணம் ப